[19th September 1958

SRI P. G. MANICKAM: 42 பஞ்சாயத்து போர்டுகளில் ஹரிஜனங்களுக்கு தனிப்பட்ட ஸ்தானங்கள் ஒதுக்கப்படாததற்கு காரணங்கள் யாவை ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: எந்த இடங்களில் 50 சதமானத்திற்கு அதிகமாக ஹரிஜனங்கள் இருக்கிறார்களோ, அங்கே அவர்களுக்கு தனியாக ஸீட்கள் ஒதுக்கப்படுவதில்லை. அதுவுமன்றி பஞ்சாயத்து மொத்த அங்கத்தினர்களில் ஐந்தில் ஒரு பாகத்திற்கு மேல் ஹரிஜனங்களுக்கு தனிப்பட்ட இடம் ஒதுக்கப்படுவதில்லை. இதற்கு மேலாக ரிஸர்வேஷன் அவசியமில்லை என்று நான் கருதுகிறேன்.

*Ministers Tour.*

* 315 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR (on behalf of Sri D. S. Authimoolam): கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா :—

(அ) 1958-ம் வருஷம் எப்ரல் மாதம் 15-ம் தேதிக்குமேல் மே மாதம் முடிய கன்னியாகுமரி ஜில்லாவுக்கு எத்தனை மந்திரிகள் விஜயம் செய்தார்கள் ?

(ஆ) அவர்கள் பெயர்கள் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) 6 (six); and

(*b*) they are, Srimathi Lourdhammal Simon, Sri R. Venkataraman, Sri M. Bhaktavatsalam, Sri C. Subramaniam and Sri M. A. Mnickavelu of this State and Sri Humayun Kabir, Union Minister for Scientific Research and Cultural Affairs.

*Karaneeswarar Temple*

* 316 *Q.*—SRI K. VINAYAKAM: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it is a fact that the trustees for Sri Karaneeswarar temple, Saidapet, Madras, should be only from one particular community, viz., Sengunda Mudaliars;

(*b*) whether there is any proposal to appoint non-Sengundavars as Trustees to the temple; and

(*c*) what is the procedure adopted for the appointment of the trustees to the temple?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Yes, Sir. The trustees at present belong to the community of Sengunthar.

(*b*) Yes.

(*c*) According to the scheme framed for the temple by the Sub-Court, Chingleput, in 1924, there shall be three Executive Trustees who shall be elected by an "electoral college" consisting of members of the Sengunthar community permanently residing in Karani village and qualified to be electors by satisfying the several conditions stipulated in the scheme. The elections are held in conformity with the rules relating to Municipal elections, subject to such notifications as may be introduced by the electors or by Court and they are always conducted by ballot. The first three persons

19th September 1958]

securing the largest number of votes are declared elected as Executive Trustees. The result of the election is announced by the Returning Officer on the evening of the day of election and submitted to the Court together with the voting papers.

SRI K. VINAYAKAM : Sir, does the judgment given by the District Judge, Chingleput, specifically and categorically state that no non-Sengunthar should be elected and that only Sengunthars should be elected to the temple Trust Board?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : That was the scheme settled by the Court. But the Deputy Commissioner, Endowment, proposes to have the scheme amended by taking it before the court.

### *Special Minor Irrigation Schemes*

*317 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் ஜில்லாவிலே விசேஷ சிறிய நீர்ப்பாசன திட்டங்களுக்கென 1957–58 ஆண்டு ஒதுக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

(ஆ) இத் திட்டத்தின் கீழ் தாலுகாவாரியாகக் கட்டப்பட்ட சிறு பாசன ஆதாரங்கள், குளங்கள், ஏரிகள், அணைக்கட்டுகள், வாய்க்கால்கள் எத்தனை ?

(இ) இத் திட்டத்துக்காக ஒதுக்கப்பட்ட தொகையில் செலவழிக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Rs. 82,4000.

(*b*)

| | Taluk. | Name of work. |
|---|---|---|
| 1 | Avanashi .. .. .. | Restoration of Orakkarai Venkataraman Chettiar Channel. |
| 2 | Pollachi .. .. .. | Improvements to Kalapathu tank. |
| 3 | Pollachi .. .. .. | Providing irrigation facilities to the lands situated on the left side of Aliyar River. |
| 4 | Palladam .. .. .. | Restoration of abandoned Nilambur tank. |

(*c*) Rs. 59,991.

SRI P. G. MANICKAM : பவானி தாலுகாவில் இந்தத் திட்டத்தின்கீழ் ஏதாவது வேலைகள் நடைபெற்றிருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : 1957–58 இந்தப்பணம் "அலாட்" செய்யப்பட்டது. அதற்காக இந்த ஸ்கீம்கள் எடுத்துக் கொள்ளப்பட்டன. பவானி தாலுகாவும் கவனிக்கப்பட்டு வருகிறது.

SRI N. MARUDHACHALAM : கோவை ஜில்லாவிலே மேற்கு பதியிலே ஏரி, குளங்கள், கால்வாய்கள் வெட்டப்பட்டனவா ? அங்கு ஏதாவது ரிபேர் செய்யப்பட்டதா என்பதை அறிய விரும்புகிறேன்.